உள் நாட்டிற்கு
வருட சந்தா ரூபா 3.

107

வெளி நாட்டிற்கு
வருட சந்தா ரூபா 4.

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

RÉPUBLIQUE FRANÇAISE
LIBERTÉ—ÉGALITÉ.—FRATERNITÉ.

VITTAGAM

LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
Tamil Pandit
Jaffna
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, NO. 2,
Pondichéry.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம்:—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. III. | புதுவை, தாது ஸு சித்திரை மீ சஉ (16—4—36) | NO. 18.

## சுத்தசாதகம்.

முன்பதசிருட்டிபதிபசுபாச
முன்றையுமனுதியாய்நிறுவும்
முன்பமமானதொம்பதப்பசுவே
முடிருணீங்கிச்சுத்தமதாய்ப்

பின்பதசிருட்டிச்சகமித்தையந்தப்
பிரமமேயுளதெனநிறுவும்
பின்பதமானதற்பதவருளிற்
பிறங்குந்தாதான்மியமடைந்தே

சின்பதமானவசிபதசிருட்டிச்
சிவசத்திலீலையாய்நிறுவும்
சின்பதமானவசிபதசிவத்தைச்
சேர்ந்ததற்கங்கமாய்நின்றல்

மன்பதமுன்றும்பின்னையபினையு
மாசறுசிவமுமென்றுணர்வாய்.
மன்பரமுத்திமுடிந்ததுவாகு
மற்றவைதனினிற்கிற்குறையே.

உ

திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.
[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை

தாது ஷூ சித்திரை மீ உ

## வியத்தல்.



இத் தமிழுலக மாக்களாகிய நாம் ஆறறிவு பூரணம் பெற்று மக்களாகிப் பேரின்ப லாபம் எனும் நித்தியானந்த சுகப் பேறடைந்து உய்தி யடைய வேண்டும் எனத் தமது திருவுள்ளத்து முகிழ்த்த பெருங் கருணையினால்,

வித்தகச் சித்தர் பெருமானும் இடைக்காடர் எனப் பெயரிய புலவர் பெருமான் அருளிய மூவடி முப்பது என்னும் அதி உன்னதமான உத்தம நூலில்

பொருட் கூறு என வகுக்கப் பட்ட இரண்டாவது அத்தியாயத்தில் மூன்றாவது சூக்த மகுடமாகி மிளிர்வது "வியத்தல்" என்பது.

இச் சூக்தத்துக்கு முன்னதாகி விளங்குவது "புறப்போலிவு" என்னும் மகுடம் தாங்கியது.

இதன் பண்பும் பயனும் "வித்தகம்" தொகுதி 3 இல. 16, 17இல் ஒருவாறு விளக்கிக் கூறப்பட்டன.

உலகினரால் மறத்தாறு என வகுக்கப்பட்ட சிற்றின்ப போகமாகிய காமப் புணர்ச்சிக் குரிய மைந்து என்னும் மையல் — மையல் என்னும் பித்து — பித்தினலாய பற்றுக் கோடு — பற்றுசு கந்து எனப்படும்.

ஆசான் ஆணைவழி வழுவாது நின்று ஒழுகும் மாணவன் உஞற்றும் அகப் பயில்வு புறப்பயில்வுகள் அடங்கிய களவு எனும் கந்தருவ வழக்கத்தால், அம் மைந்து எனப்படும் கந்து நிறையுட் புகுத்தப்பட்டுத் தெளிவு பெறும் என்பதும்,

உணர்ச்சி வடிவாகிய அக் கந்து இவ்வாறு தெளிவடைந்துழி — தூய்மை பெற்றுழி, அதுவே சிற்றின்ப வாழ்வாகிய சிறிய வாழ்வுக்குப் பெருஞ் சீர்த்தியை ஆக்கமுறச் செய்வான் பெருந்துணை என அமையும் என்பதும்,

பிரத்தியட்சப் பிரமாணமென — உறுசான்றெனப் பல்லோரும் காணும்படி உலகியலுக்கு ஒப்பிய பெரியோர் எனப்படும் வல்லரசுகளின் அவையினும் மிக மிகப் பெரிய — அளப்பில் ஆற்றலுடைய உயரிய பீடத்தை அக் கற்றல் கேட்டல் உடையானுக்கு வழங்கி அப் பீடத்தின்கண் அவனை அமரச் செய்யும் என்பதும்,

ஷை "புறப்போலிவு" என்னும் சூக்தத்தால் அறுதியிடப்பட்ட பொருளாம் என அறிதற் பாற்று.

வாய்மையான கற்றல் கேட்டல் நிரம்பிய தத்துவப் பெரியாராம் மெய்யடியார் உயரிய பீடத்து வீற்றிருப்பார் என்பது பின்வரும் பிரபல சுருதியாலும் நன்று வலியுறுதல் கண்டு கொள்க.

### திருவாசகம்.

கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ (று)
இட்ட அன்பரொ டியாவருங் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டி னோடிரண் டும்மறி யேனையே.

[ஷை திருச்சதகம் (கைம்மாறு கொடுத்தல் செ. 49.)]

[கட்டறுத்தல்—சிறு வாழ்வு என்னும் நிறை முறையான சிற்றின்ப வாழ்வினால் மையல் என்னும் கடலில் பையப் பையக் கொடு போந்து பாசம் எனும் தாழ் உருவியதை உணர்த்தி நின்றது.

நீறு இட்ட அன்பர்—அசுத்த பௌதிகம் சுண்ணமாகப் பெற்ற — நீறாகப் பெற்ற விமல காயமுடைய மெய்யடியார்; அடியார் கூட்டம்.

பட்டி மண்டபம்—உயரிய வித்தியா பீடம்; காமாட்சி பீடம். "எட்டினோடு இரண்டு அறியேனை" — அகர உகரம் எனப்படும் பின்கலை இடைகலைகளின் உண்மையை — உயிர் உடல்களின் பண்பை முன்னே அறியா திருந்த என்னை.]

பின்வரும் பிரமாணமும் உயரிய பீடத் தமர்ந்த மெய் யடியார் நீர்மையை நன்று புலப்படுத்துகின்றது.

### திருமந்திரம்.

வருந்தித் தவஞ்செய்து வானவர் கோ
[வாய்த்
திருந்தம ராபதிச் செல்வ னிவனெனத்

தருந்தண் முழவங் குழலு மியம்ப
இருந்தின்ப மெய்துவ ரீச னருளே.

[ஷை 3ம் தந். அட்டாங்கயோகப்பேறு (ஆதனம்) செ.3]

உலகோரால் நிஷேதம் எனவும் மறத்தாறு எனவும் வெளிப் படையாகப் புறக் கணிக்கப் பட்டும் அந்தரங்கமாக—மறைவாக — திரை மறைவாகக் கையாளப் பட்டும் ஆளும் திறன் அறியாது தற்சுதந்திரம் என்னும் அசுத்த அவாவின் வசத்தால் உஞற்றப் பட்டும் அத்தகைய நிறை மீறிய பயில்வால் பிணி மூப்புச் சாக்காடுகளையே — சாதலையே உறு பயன் என வழங்கிஅவ் உலக மாக்களை அரு நரகில் தள்ளும் பெற்றியுடைய காமமே காமம் என்னும் சிற்றின்பமே நிறை முறையோடு கடைப்பிடுங்கால் முத்திக் குரிய சாதனம் — முத்தி நெறிக்கு இன்றியமையாத சாதனம் ஆம் எனவும், இஃதன்றி வேறு தடம் இல்லை எனவும் புலவர் பெருந் தகையாம் இடைக்காடரால் மேலைச் சூத்திரங்களால் அறுதியிட்டு உறுதி செய்யப் பட்ட தென்பது வெள்ளிடை மலையாம்.

நிறை முறையான சிற்றின்ப நுகர்ச்சியே — இல்லற வாழ்வே பேரின்ப லாபம் பெறுதற்கு இன்றி யமையாச் சாதனம் எனவும் இஃதன்றி வேறு தடம் இல்லை எனவும் வற்புறுத்தும் வேதப் பிரமாணங்கள் சில இயைபு பற்றி ஈண்டுக் காட்டப் படுகின்றன.

## ஞானசம்பந்தர் தேவாரம்.

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலிகுழலுமையொடுவிரவதுசெய்து
நரைதிரைகெடுதகவதருளினனெழில்
வரைதிகழ்மதில்வலிவலம்உறையிறையே.

(ஷை திருவலிவலம்-திருவிராகம்—பண் [வியாழக்குறிஞ்சி. பாசு. 6)

["நரைதிரைகெடுதகவது" எனவே இனம் பற்றிப் பிணி மூப்புச் சாக்காடுகள் நீங்குதலும் கூறப்பட்டன ஆகும். சிற்றின்பமே பேரின்ப லாபம் பெறுதற்கு உரிய சாதனம் என்பது இப் பாசுரத்தால் வலியுறுத்தப் பட்டது.]

## அப்பர் தேவாரம்.

வினைவறிவிலாமையாலேவேதனைக் [குழியிலாழ்ந்து
கனைகனுமில்லேனெந்தாய்காமரங்கற்று [மில்லேன்
தனையவிழ்கோதைநல்லார்தங்களோடின்ப [மெய்த
இனையனுமல்லேனெந்தாய்என்செய்வான் [தோன்றினேனே.

(ஷை குறைந்த திருநேரிசை பாசு.9)

[உடனுயிர் அசுத்தம் நீங்கி அமல வினைவு அடையப் பெறுதல் — "பின் முனை தோன்றல்" (மூவடி முப்பது—காமம் — சூக்.1.) நிறை முறையான சிற்றின்ப நுகர்ச்சியா னன்றிப் பிறவாற்றான் முடியாத காரியம் என்பது இப் பாசுரத்தால் நன்று வலியுறுதல் கண்டு கொள்க. வினைவு—அமல வினைவு – பரஞ் சுடர்ச் சோதி உடலகத்து ஆக்க முறுதல்.]

## சுந்தரர் தேவாரம்.

ஓர்ந்தனனோர்ந்தனனுள்ளத்துள்ளேநின்ற [ஒண்பொருள்
சேர்ந்தனன்சேர்ந்தனன்சென்றுதிரு [வொற்றியூர்புக்குச்
சார்ந்தனன்சார்ந்தனன்சங்கிலிமென்றோள் [தடமுலை
ஆர்ந்தனன்ஆர்ந்தனன்ஆமாத்தூரையன் [அருளாதே.

(ஷை திருஆமாத்தூர்—பண்—கொல்லிக்கௌவாணம் பாசு.4.)

## திருவாசகம்.

என்புள் ளுருக்கி யிருவினையை யீடழி [த்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மை [செய்து
முன்புள்ள வற்றை முழுதழிய உள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் [கொண்டன்றே.

(ஷை குலாப்பத்து செ.3)

[நிறைமுறையான சிற்றின்ப நுகர்ச்சியாற்றான் இருவினை ஒப்பு மலபரிபாகம் சித்திக்கும் என்பது இப்பாசுரத்தால் வலியுறுத்தப் பட்டது.

இப் பாசுரத்தின் விளக்கமான உரையை வித்தகம் தொகுதி 1 இல. 26, 49இல் காண்க.]

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் [கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் [தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் [துட்பொருளை
ஐயனெனக் கருளியவா றூர்பெறுவார் அச் [சோவே.

(ஷை அச்சோப்பதிகம் செ. 7)

[குரு நாதனாகிய எம் பெருமான் மணிவாசகரை மையல் என்னும் கடலில் — சிற்றின்ப நுகர்ச்சியாகிய இல்லற வாழ்வில் பையப் பையக் கொடுபோந்து தையலார் மையல் எனும் தாழை—பாசம் எனும் தாழை உருவி உய்தி யடையச் செய்தமையும்,

இத்தகைய நிறை முறையான சிற்றின்ப நுகர்ச்சி என்னும் சிறு வாழ்வினா லன்றிப் பிறவாறு பாசம் எனும் தாழ் உருவப் படுதல்-பேரின்ப லாபம் பெறுதல் முயற் கொம்பே ஆகும் என்பதும் இப் பிரபல தெய்வச் சுருதியால் வெள்ளிடை மலையா தல் கண்டு கொள்க.]

## திருவாய்மொழி.

வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தால்
பெருந்துயரிடும்பையிற்பிறந்து
கூடினேன்கூடிஇளையவர்தம்மோடவர்
தருங்கலவியேகருதி
ஓடினேனோடிஉய்வதோர்பொருளால்
உணர்வெனும்பெரும்பதந்தெரிந்து
நாடினேனாடிநான்கண்டு கொண்டேன்
நாராயணாவென்னுநாமம்.

[சிற்றின்ப நுகர்ச்சியாற்றான் உணர்வு தூய்மை அடையும் — உணர்வு எனும் பெரும் பதம் தெரியவரும் — எம்

பெருமான் திருவடி காணப்படும் — பேரின்ப லாபம் அடையப்படும் என்பது இப் பாசுரத்தால் நன்று வலியுறுத்தப் பட்டது. நாராயண என்னும் நாமம் — எம் பெருமான் திருவடி என்னும் அமலஐகாரம்.]

## திருவுந்தியார்.

பெற்றசிற்றின்பமேபேரின்பமாயங்கே
முற்றவரும்பரிசுந்தீபற
முளையாதுமாயையென்றுந்தீபற.

(ஷை செ. 33)

[நிறை முறையான சிற்றின்ப நுகர்ச்சியே பேரின்ப மாகித் திரிய வேண்டும் எனவும், இஃதன்றி வேறு தடம் இல்லை எனவும், இதனாற்றான் பாசங்கள் பற்றுக்கள் ஒழியும் எனவும் இச் செய்யுள் நன்று வலியுறுத்துதல் கண்டு கொள்க.]

இவ்வாறு வரும் பிரமாணங்கள் பல. எடுத்துக் காட்டின் மிகப் பரக்கும்.

ஆசான் அடிக்குத் தற் சுதந்த ரத்தை அர்ப்பணம் செய்து—அடிமை செய்து அவன் உபதேச மொழிகளா கிய ஆணையைச் சிரமேற் கொண்டு பயபக்தியுடன் மதி வைராக்கியத்தை ஊன்றுகோல் எனப் பிடித்துப் பயின்று அடிபேர்த்து ஆரோகணப் படியில் ஏறிக் கதிபெறும் பக்குவி யாகிய மாணவன்,

தான் பெற்ற தற்றக இணக்கமு டைய நிறை யுடைமையால் அடைந்து பற்றும் தடம் இன்னது எனவும், அத் தடமாகிய படியின் பண்பு இன்னது எனவும்,

"புறப்போலிவு" என்னும் இரண் டாவது சூக்தத்தால் ஒருவாறு சுருங்கக் கூறி விளங்க வைத்த புலவர்,

அத் தடத்தின் பண்பும் பயனும் மேலும் சிறிது விளக்கமுற உரைக்க வேண்டும் என்னும் கருணை மேலீட் டினால்,

"வியத்தல்"

என்னும் மகுடம் சூட்டி மூன்றாவது சூக்தத்தை அருளினார் என அறிக.

## மூவடி முப்பது.

பொருட் கூறு. 2

வியத்தல். சூக்தம். 3

ஆற்றல்பிற ரறிதலி னகங்கிளர் வுறுதலின்
கூற்றறி பாணர் கெழுமிய கோடலிற்
றேற்ற முறுகவே போற்றல்சால் வியப்பே.

என்பது சூக்தம்.

"புறப் போலிவு" என்னும் மேலைச் சூத்திரத்தால் கூறப்பட்ட உயரிய தெய்வ பீடத்து அமர்ந்த மெய்படியா னுக்கு அப் பீடத்தின் மகத்துவத்தால் முன்னிலையாகிய உலகம் அடிமையாகி ஏவல் புரியும் பெற்றிமை உணர்த்துதல் நுதலிற்று இச் சூக்தம் என்க.

ஒருவன் ஆற்றலை அறியாத பிறர் அறிந்து கொள்ளுதற்கும் அதனால் மனம் கிளர்ச்சி யுறுதற்கும் சொற்றி றன் அறிந்த பாணர் நிறைந்த ஊதியம் பெறுதற்கும் உரியதாதலின் வியத்தல் என்னும் புகழ்தல் தோற்ற முறுதல் வேண்டற்பாற்று என உலகியலுக்கு ஒப்பியவாறு எம்போலிய அகிலப் படிப்பாளிகள் பொருள் காணும் படி யும், உண்மையை நாடும் ஆற்றலும் காதலும் உடையார் குருவருளால் அதனை உணர்ந்து உய்தியடையும் படி யும் அமைக்கப் பட்டது இச் சூக்தம் என்க.

இச் சூக்தத்தின் உண்மைப் பொ ருள் தான் யாதோ? எனின், கூறுதும்:—

1

முன்னிலையோராகிய உலகோர் உணர்ந்து கொள்ள முடியாத கழிபெரு வியப்பை விளைக்கும் காரி யங்களை அருட் சித்துக்களை வழங்கும்— "வியப்பு" என்னும் தடத்தை — தத்து வத்தை அடைந்த மெய்படியானது ஆற்றலை அவ் உலகோராகிய பிறர் "அம்மம்ம! இவன் ஆற்றல் மிக மிகப் பெரிதே!" என அறிதலானும்,

2

அதனால் அவ் உலகோர் அகத்தே பெருங் கிளர்ச்சி தோன்ற, அத்தகைய தடத்தை அடைந்த அப் புண்ணி யனைக் காண்பான் அவாவி அவனை அடைந்து சூழ்ந்து பணிந்து நிற்ற லானும்,

3

கூற்றனை—சாதல் நிறையை அறிந்த (நாதர்— நாதன்) பாணர் என்னும் ஆசான்—குரு—அருட்குரு என்னும் ஒலியானது தன் இயக்க தத்துவத்தி னுன்றும் விடுபட்டு பொருத்தமான— ஏற்ற நிறையைக் கொண்டு — ஏற்ற நிறையோடு விண் சொரூபத்தைக் கொள்ளுதலானும் — அடைதலானும், பிறரால் போற்றப் படுதல் மிகுந்த "வியப்பு" என்னும் தத்துவம் தோற்ற முறுவதாக; அடையப் படுவதாக என்பது.

மேல் இவ் உண்மைப் பொருள் ஒருவாறு விளக்கமுற உறைக்கப்படும்.

"வியத்தல்" என்னும் மகுட நாமத் தால் போந்த பொருள் யாதோ? எனின், அதுதான் ஏவல் புரிதல் — ஏவல் கொள்ளுதல் என்று கூறப்படும். வியம் என்றால் ஏவல் என்ப.

## தொல்காப்பியம்.

"வியங்கொளவருதல்"

(ஷை சொல்லதிகாரம் சூத். 66)

என்புழி "வியம்" ஏவல் எனப் பொ ருள் படுதல் காண்க. வியங்கோள் வினை முற்றுப் பெரும்பான்மை ஏவல் பொருட்டாய் வருதல் இலக்கண நூற் கொள்கை.

## சீவக சிந்தாமணி.

''எண்ணியவியநெறியால்விடுத்தான்''

(கேனகமாலையார்இலம்பகம் செ. 330)

என்னும் செய்யுட் பாகத்தில் ''வியம்'' என்பதற்கு உரை யாசிரியர் ''வியம் என்பது ஏவலாதலிற் போக்கின் மேற்று'' எனப் பொருள் கூறினர். ''வியவித் தட்கும்'' என்னும் தணிகைப் புராணச் செய்யுட் சொற்றொடரில் வியம் என்பது ''வியவி'' என வினை யெச்சமாகத் திரித்து வழங்கப் பட்டது.

ஆதலால் ''வியத்தல்'' என்பது ''வியம்'' என்னும் சொல்லடியாகப் பிறந்த தொழிற் பெயராய் ஏவல் புரிதல் எனப் பொருள் பட்டு நிற்றல் இலக்கண நெறியே என்பது கண்டு கொள்க.

''வியத்தல்'' என்னும் சொல்லுக்கு ஏவல் புரிதல் எனப் பொருள் கண்டீரே! இனி இச் சூக்தத்தின் கடை மொழியாய் விளங்கும்

''வியப்பு''

என்னும் சொல்லிற்குப் பொருள் யாது கூறுதிர்? எனின், வியப்பிற்குரிய அரிய பெரிய செயல்களை விளைக்கும் தடம்—தத்துவம் வியப்பு எனப் பட்டது என்க.

அஃதாவது, வியப்பு என்னும் சொல் மாணவன் தன் அரிய முயற்சியால் அடையப் பெற்ற தடத்தை —தத்துவத்தை—வரையைக் குறிக்கும் சொல்—வரைக் குரிய சொல் எனவும்,

அவ் அரிய பெரிய படியில் நிற்பவனுக்கு அத் தடம் வழங்கும் பயன் ''வியத்தல்'' என்னும் சொல்லால் குறிக்கப் பட்டது எனவும்,

அஃதாவது, அவன் அமர்ந்த பீடத்தின் மகத்துவத்தால் அகிலம் அனைத்தும் கட்டுப் பட்டு அவனுக்கு அடிமையாகி — முன்னிலையாகிய இப் பிரபஞ்ச முழுவதும் அவனுக்கு அடிமையாகி,

## அப்பர் தேவாரம்.

''தானலாதுலகமில்லைசகமலாதடிமை [யில்லை''

என்னும் வேத வாக்குக்கு ஒப்ப அவனுக்கு ஏவல் புரியும் எனவும் கூறற் பாற்றும்.

இனி, ''வியப்பு'' என்பது ஓர் தத்துவத்தைக் குறிக்கும் சொல் என்றீரே! அத் தத்துவம் தான் யாது? எனின்,

அஃது ஆதி சத்தியின் அவதாரம் எனப் போற்றப்படும் எமது பாட்டியாகிய ஔவையார் அருளிய பின் வரும் அமுத வாக்கியத்தால் தெளியப் படும் என அறிதற் பாற்று.

## ஔவை குறள்.

### முத்திகாண்டல்.

பெண்ணு ணலியென்னும் பேரொன் [றிலதாகி
விண்ணாகி நிற்கும் வியப்பு.

(ஷை அருட்பால் செ. 5)

இச் செய்யுள் ஔவை குறளில் ''முத்தி காண்டல்'' என்னும் அதிகாரத்தில் உள்ளது.

முத்தி காண்டல் என்றால் என்னை? எனின், சிறிது கூறுதும்:—

காண்டல் என்றால் செய்தல் எனப் பொருள் படும். உரை கண்டார் என்றால் உரையை இயற்றினர் — செய்தார் என்பது பொருளாம்.

இது போலவே, முத்தி காண்டல் என்றால் முத்தியைச் செய்து கொள்ளல் ஆக்கிக் கொள்ளல் என்பதே பொருளாம்.

அதுதான் கயிலை முதற் குரவனாகிய சற்குருநாதன் அருளால் பெறப் படும் உரிய சாதகங்களால் நமது உடலில் உள்ள சத்தசைவான தீ சித்தசைவான தீ என்னும் இரண்டும் சமப்படுதலால் மூன்றாவது ஒன்று — மூன்றாவது தீ — முத்தீ — முத்தி ஆக்கமுறுதல் — ஆக்கமுறச் செய்தல் என்பது.

அரு மறை அந்தணர் எனப்படும் தத்துவப் பெரியார் ஓம்பும் — தம் அகத்தே விளக்கும் வாய்மையான முத்தீ இதுவே என்க. இவ் வாற்றால் முத்தி காண்டல் என்பதன் உண்மைப் பொருள் கண்டு கொள்க.

பெண் என்றும் ஆண் என்றும் அலி என்றும் கூற முடியாது இயக்க உருவம் பெற்றதனால் ஓவாது ஒலித்துக் கொண்டே நிகழும் நாதம் அமல நிறையில் புக்குழி—அமல மடைந்துழி அந் நிறைக்கு ஏற்பக் கந்து என்னும் உணர்ச்சி தெருளொடு புணர்ந்து — தெளிவு கொண்டு-தூய்மை அடைந்து ஆரோகணம் பெறும் என்பது ''புறப் பொலிவு'' என்னும் மகுட முடைய மேலைச் சூக்தத்தால் விளக்கப் பட்டது அல்லவா?

அக் கந்து தன் தூய்மையால் ஏற்ற பெற்றி அடைந்து ஊனிற் கலந்து — பொருந்தி-பஞ்சீகரணித்துப் பெருக்கம் அடைய அடைய — ஊனில் உறைய உறைய இயக்க உருவமான நாதமும் தன் இயக்கப் பெட்பினின்றும் விடுபட்டுத் தனது உற்பத்தித் தானமாகிய ஆகாய தத்துவமாகி அமையும் — ''விண்ணாகி நிற்கும்'' என்க.

''வியப்பு என்னும் பெயரால் குறிக்கப் பட்ட அரிய பெரிய தடம்—தத்துவம் இதுவே என அறிதற் பாற்று.

கந்து என்னும் வாயு — உணர்ச்சி அமலமடைந்து விண்ணாகி நிற்கும் வியப்பே — தத்துவமே திருமந்திரம்

என்னும் பிரபல சுருதியில் "ஆகாசப் பேறு" என்னும் அத்தியாயத்தால் விளக்கப் பட்டதும் ஆம்.

## திருமந்திரம்.

அண்ட வொளியு மகண்ட ஒளியுடன்
பிண்ட வொளியால் பிதற்றும் பெருமையை
உண்ட வெளிக்கு ளொளிக்கு ளொளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே.

[குறியைக் குலைத்தல் — அச்சு முறிதல். "அச்சு முறிந்தது" என்பது திருவாசகம் — திருவுந்தியார் செ. 3.]

பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி
அயனொடு மாலறி யாவகை நின்றிட்
டுயர்நெறி யாயொளி யொன்றது வாமே.

[பயனுறு கன்னியர் போகமாகிய சிற்றின்ப நுகர்ச்சியாற்றூன் கந்து தூய்மை யடைந்து விண் சொரூப மாகும் — ஒளி மயமாகும் என்பது இம் மந்திரத்தால் வலியுறுத்தப் பட்டது.]

உயிர்க்கின்ற வாறு உலகமு மொக்க
உயிர்க்கின்ற வுள்ளொளி சேர்கின்ற [போது
குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி
வெயிற்கொண்டென் னுள்ளம் வெளியது [வாமே.

(ஷை 9ம் தந். ஆகாசப்பேறு 3, 4, 7)

[உள்ளொளி — கந்து, குயிற் கொண்ட பேதை—நாத சொரூபி — அமலநாதம். உள்ளம் வெளியது ஆதல்—ஆகாசப்பேறு — கந்து அமல மடைந்து விண் சொரூபமாதல்.]

கூற்றறி பாணர் கெழுமிய கோ டலின்:—

நாதம் என்பதும் நாதன் என்பதும் ஒன்றே ஆதலால், குரு — அருட்குரு ஆதலால், (குருவே சாமவேத உருவன் ஆதலால்) அவ் ஒலியே இசை கொண்டு ஒலிக்கும் பாணர் எனப்படும் என அறிக.

பின் வரும் பிரபல சுருதிகள் இவ் வுண்மையை நன்று புலப்படுத்துவன ஆகும்.

## திருமந்திரம்.

"...............................................
ஓசையும் ஈசன் உணரவல்லாருக்கே"

(ஷை 3-ம் தந். தியானம் மந். 11)

## ஞானசம்பந்தர் தேவாரம்.

"தயங்குசோதிசாமவேதாகாமனைக்காய்ந் [தவனே

(ஷை திருவலிவலம்-பண்-பழந்தக்கராகம் [பாசு. 3)

## சுந்தரர் தேவாரம்.

"நாதனைநாதமிகுத்தோசையதானவனை
ஞானவிளக்கொளியைஊனுயிரைப் [பயிரை..................."

(ஷை திருக்கானப்பேர்-பண்-புறநீர்மை. [பாசு. 9)

## அப்பர் தேவாரம்.

"சாமவேதக்கர்தருவம்விரும்புமே"

அப் பாணர் எத் தன்மை உடையர்? எனின், கூற்றறி பாணர் — கூற்றனை அறிந்த பாணர் என்று கூறி யருளப் பட்டது.

மரண தர்ம முடைய சரீரத்தில் இயற்கையாகவே பஞ்சீகரணிக்கப் பட்டு விளங்கும் சாதல் நிறையை அறிந்த பாணர் அச் சரீரத்தில் இடங் கொள்ளக் கொள்ள — உடலில் வியா பிக்க வியாபிக்க — உடலில் இயைந்து அவ் இயைபினால் ("கெழுமிய கோ டலில்") பொருத்தமான — ஏற்ற நிறை பெறுதலால் விண்ணாகி விண் சொரூபம் பெறுவர் என்க.

அஃதாவது குரு நாதன் — ஆசான் — ஆசான் எனும் ஒலி தன் இய்க்க தத்துவத்தி னின்றும் விடுபட்டு, ஊனில் உறைவதனால், விண்ணாகி நிற்கும் — விண் சொரூபமாகும் என்பது.

இவ்வாறு நாதம் எனும் ஒலி ஊனில் உறைந்து இரண்டறக் கலந்து விண்ணாகி நிற்கும் அவசரம் "வியப்பு" எனப் பெயர் பெறும் என்க.

பூநீர் என்னும் இரு பூதங்களினும் ஆகாய தத்துவம் பெரும் பாகம் பெறுதல் என்பதன் உண்மையும் இதுவே ஆம்.

இவ் வேத உண்மையே துவாதச வாசற் படிகள் (Douze Portes) என்னும் பிரான்சு (French) நூலில் ஜி. றிப்ளி (G. Riply) என்னும் மேதாவியாலும் கூறப் பட்டது.

அது,

'ஒருவனும் ஒருத்தியும் உண்மைக் காத லோடு கூடி எஞ்ஞான்றும் அவச் சலனம் இன்றி நித்தியத்துவம் பெற்று உப சாந்தத் தோடு வாழவேண்டுமாயின், நிலத்தையும் நீரையும் சமப்படுத்தினாலன்றி வேறு உபாயத்தால் முடியாது. நிலமும் நீரும் ஆகாய தத்துவத்தைப் பெறின், அஃதா வது அவ் இரு பூதங்களிலும் ஆகாய தத்துவம் பெரும் பாகம் பெறின் இருள் (அஞ்ஞானம்) இரியும். உதயம் லயம் (வியாபக வியாப்பியம்) என்னும் இவ் இரண்டன் மத்தியில் வெளிச்சம் உண் டாகும்—விளக்கம் உண்டாகும்"

என்பது.

பூவும் நீரும் ஒருபுறமும் கானும் வானும் ஒருபுறமும் ஆக, நடு வரசாகிய கந்து என்னும் உணர்ச்சி அமல மடைந்து விண்ணைத் தாவி விண் சொரூபம் பெறுதல்—விண்ணாகி நிற்றல் என்பதன் உண்மையும் இதுவே ஆம்.

இப் பெற்றி கைவரப் பெற்றவரே இருவினை ஒப்பு மல பரிபாகம் வாய்ந்த மெய்யடியாராகிய வித்தகர் என அறிதற் பாற்று.

நாதம் எனும் ஒலி ஊனில் இரண் டறக் கலந்து விண்ணாகி நிற்கும்

அவசரம் "வியப்பு" எனப் பட்ட மைக்கு — வியப்பு என்னும் பெயர் பெற்றமைக்குக் காரணம் என்னையோ? எனில், கூறுதும்:—

அந்தர வாசியாகிய நாதம் ஆகாசம் எனும் சூனிய சிம்மாசனத் தமர்ந்து கோலோச்சும் ஆதலால்,

ஆகாச பூதமே அண்டாண்ட சராச ரங்களினும் அணுவுக்கு அணுவினும் வியாபித்து, அகில சீவர்கள் மதிப் பொலிவுக்கு எட்டாத — சீவர்களால் உணர்ந்து கொள்ள முடியாத பேராச் சரியத்தை விளக்கும் காரியங்களை — செயற் கரும் செயல்களை—சித்துக்களை — அருட்புதுமைகளாகிய வியத்தகு செயல்களை வழங்கும் தானம் — தத்துவம் ஆதலால்,

அத் தானத்தை அடைந்த நாதம்— ஆகாயமே தானான நாதம்—விண்ணாகி நிற்கும் நாதம் "வியப்பு" எனப் பட்டது என்க.

வியத்தகு சித்திகளை விளைப்பதும் அகில மாக்களை ஏவல் கொள்வதும் "வியப்பு" என்னும் தடமே என்க.

இத்தகைய தடத்தை அடைதல் அரிய பெரிய தவப் பயன் ஆதலால், முத்தியை அவாவும் ஒருவனால் அடையப்பட வேண்டிய முதன்மையான தடம் — அமல முதற்படி — முத்தி வாயில் இதுவே ஆதலால்,

இப் பெற்றி கைவரப் பெறுக எனக் கருணை மேலீட்டினால் ஆசி கூறுபவராய்,

"தோற்ற முறுகவே"

என வாழ்த்துதற் பொருள் அமைந்த வியங்கோள் வினை முற்றாக அமைத்து முடித்தருளினர் எமது வித்தகச் சித்தர் பெருமான் என அறிக.

ஆதலால் அவ் வியப்பு என்னும் தத்துவம்,

"போற்றல் சால் வியப்பு"

அண்டாண்ட சராசரங்கள் அனைத் தும் பணிந்து போற்றும் பெற்றி மிகுந்த ("போற்றல் சால்") வியப்பு என்னும் தத்துவம் விளைவேற்றப் பட்டு நிறை பெற்றமழி, அந் நிலைமை உடையவன் ஆற்றலை — அளப்பரும் ஆற்றலை முன்னிலையோர் அனைவரும் அறிந்து,

("ஆற்றல் பிறர் அறிதலின்")

வியத்தல் செய்வர் என்க.

உலகோர் அவன் ஆற்றலை — அளப்பில் பேராற்றலைக் கண்ணாரக் கண்டு,

"அகம் கிளர்வு உறுதலின்"

அகத்தே பெரும் கிளர்ச்சி தோன்று தலால் அச்சமும் கழி பெரு வியப்பும் தோன்றுதலால் அவனை — அப் புண்ணியனைக் காண்பான் அவாவுவர்; கண்டு அவன் அடி பணிவர்; பணிந்து போற்றுவர்; போற்றி ஏவல் புரிவான் விழைந்து குழைந்து குழைந்து அவனைச் சூழ்வர்; சூழ்ந்து நிற்பர் கைகட்டுக்கு இன்புற்று என அறிக.

இத் தடத்தை அடைந்தவர் சகல சித்துக்களையும் புரிவர் என்பது இவர் தம் பேராற்றலையே குறிப்பதாகும்.

இறந்தோரை எழுப்புதல் முதலிய அரிய பெரிய அருட் சித்துக்களைப் புரிபவர் இவரே ஆவர். இவரே துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலகர்; அசத்திய நெறியாகிய போலிக் கொள்கைகளை வீட்டிச் சத்தியத்தை நிலை நாட்டுபவர்.

செயற் கரிய செய்யும் பெரியாராகிய இவர் ஆற்றல் எம்போலிய சீவர்கள் சிந்தனை சொற் செயல்களுக்கு அளவு படுவதாகுமா?

ஞானசம்பந்தர் முதலிய சமய குரவரும் இந் நூலாசிரியராகிய இடைக்காடர் பெருமானும் பிறர் பலரும் இத் தடத்தை அடைந்து செயற் கரியன செய்து நித்தியத்துவம் பெற்றவரே ஆவர்.

வேடங்களாலும் போலி நிட்டை களாலும் சித்திரக் கற்பனைகளாகிய மாயா சித்திகளாலும் பிரமை யடையும் உலகோர்— சின்னாட் பல்பிணிச் சிற் றறிவினராய்க் கோரியன கைகூடப் பெறாது இடர்ப் பாடடைந்து மாண்டு போகும் படிப்பாளிகளையே மகான்கள் எனவும் மகாத்மாக்கள் எனவும் துணிந்து அவர்களையே போற்றிப் புகழ்ந்து மாழ்கும் உலகோர் இவ் உண்மைகளை ஒப்புக் கொள்ளுதல் — தெளிந்து கொள்ளுதல் எளிதின் முடிவ தன்று.

வாய்மையைக் கைக் கொண்டொ ழுகும் பெற்றி வாய்ந்தவனாகிய மேலே கூறிய மெய்யடியான் பால் வேடங்கள் ஒன்றும் காணப் பட மாட்டா. இவன் வெளிப் பட்டால் என்னாமோ இவ் வுலகம்?

"தொண்டர்தம்பெருமைசொல்லவும் [பெரிதே"
"அடியர்தம்பெருமைஅளக்கவும்பெரிதே".

என, ஆன்றோர் மெய்யடியார் பெரு மையைக் கூற முடியாது என அமைந் தனர் என்றால், அன்னவர் அருமை பெருமையை — ஆற்றலை ஒன்றும் போதா அறிவிலிகளாகிய யாமா அளவு கூட உரைக்க வல்லம்?

மேலே கூறிய "வியப்பு" என்னும் தடத்தை அடைந்தவன் — தத்து வத்தைப் பெற்றவன் ஆற்றல் இன்னது என வேதாகம முதலிய நூல்கள் முழங்குகின்றன. அவற்றுள்ளே சில பிரமாணங்கள் காட்டுதும்.

## திருமந்திரம்.

ஒழியாத விந்து வுடனிற்க நிற்கும்
அழியாப் பிராண னதிபலஞ் சத்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தி யுண் டாம்விந்து வற்றிலே.

(ஷை 7-ம் தந். விந்துஜயம் போக சர

[ஓட்டம். செ. 12)

## சூதசங்கிதை.

———

அப்பிரசாதசின்னமானந்தமவிர்சுரநேத்திர
[வங்கப்
பப்பியல்விகாரமந்தரத்தெழுதல்பரகாயப்
[பிரவேசஞ்செய்தல்
தப்பின்மெய்காட்டன்மறைத்தல்கல்லா
[நூல்தன்னையுந்தடையறப்பேசல்
செப்புறுநிக்கிரகமநுக்கிரகஞ்சிலையாதிபேத
[முற்பலவே.

பரமவத்துவிதசைவமெஞ்ஞானிபாரானந்த
[வன்முதலோரால்
வரமுறப்பூசைபுரிந்திடத்தக்கோன்மற்ற
[வனுறைதருமிடத்தே
பரவுறுமுத்திகாத்துக்கொண்டிருக்கும்
[பரிந்தவன்பணிவிடைபுரிவோன்
சரணமெப்போதுந்தலைமிசைத்தரிப்போன்
[சமானமற்றவற்கேவநுலகில்.

(ஷை சாமசாகோபநிடததாற்பரியமுரைத்த
[அத்தியாயம் செ. 30,34)

சித்துருபமாயிருப்பன்தெரிந்தன்னேன்
[மான்மியப்பாகர
நத்தன்முதலோராலுமுடியாதிவ்வதிநன்
[மந்தணத்தை
ஒத்ததயையாலுமக்குரைத்தேனென்றான்
[பிரமன்உம்பர்மகிழ்ந்
தத்தங்குவித்துவணங்கினாறிமினரிய
[தவத்தீரே.

(ஷைபிரகதாரணியத்தாற்பரியமுரைத்த
[அத்தியாயம் செ. 12)

## திருக்களிற்றுப்படியார்.

———

பாலைநெய்தல்பாடியதும்பாம்பொழியப்
[பாடியதும்
காலனையன்றேவிக்கராங்கொண்ட - பாலன்
மரணந்தவிர்த்ததுவும்மற்றவர்க்குநந்தம்
கரணம்போல்அல்லாமைகாண்.

(ஷை செ. 12)

முன்னிலையாகிய அகிலம்- உலகோர் — பிறர் இத்தகைய மெய்யடியான் வெளிப் படுங்கால் அவன் ஆற்றலை அறிதலின் — அறிவர் ஆதலின், "அடடா! இவன் ஆற்றல் மிக மிகப் பெரிதே" என அச்சமும் பத்தியும் ஆச்சரியமும் கலந்த கிளர்ச்சியினால் தாக்குண்டு "அகம் கிளர்வுஉறு தலின்") இவனைப் போற்றிப்புகழ்ந்து வியத்தல் செய்வர்—ஏவல் செய்வர் - அகிலம் ஏவல் புரியும் என்க.

பிணி மூப்புச் சாக்காடுகள் அணுகாத விமல யாக்கையாகிய வாய்மையான இடத்தையும் வாய்மையான பொன், என்னும் பொருளையும் வாய்மையான ஏவலையும் (இடம் பொருள் ஏவல்) உடையான் இவனே என அறிக.

சோதிடத்தில் வியம் என்றால் 12ம் இடம் என்ப. இதுவே துவாத சாந்தத் தலம். இதுவே மதுரை — லலாடம். அகிலம் அனைத்தையும் அடக்கி ஆண்டு ஏவல் கொள்ளும் இடம் இதுவே.

ஆதலால் வியப்பு என்னும் தடத்தைக் கண்டவன் வியத்தலையும் காண்பன்; அகில மனைத்தும் தனக்கு ஏவல் புரிதலையும் காண்பன் என்க. இயற்கை முறை இதுவே என அறிதற் பாற்று.

இத் தடத்தை அடைந்த மெய்யடியான் அகில கயவர்களையும் அடக்கி ஆண்டு—ஏவல் கொண்டு அவரவர்க்கு வேண்டியனவற்றைச் சோர்வின்றி வாரி வழங்குவன். ஆனந்த சுகவாரியும் இதுவே ஆம்.

இச் சூக்தத்தால் துவாத சாந்தத் தடத்தின் இயலையும் ஒரு சிறிது விளக்கி விட்டனர் எமது சித்தர் பெருமான் என அறிதற் பாற்று.

மேலும் விரிப்பிற் பெருகும்.

இது காறும் கூறியவைகளால் மூவடி முப்பது என்னும் அரிய பெரிய தமிழ் மறையில் "பொருட் கூறு" என்னும் இரண்டாவது அத்தியாயத்து மூன்றும் சூக்த மகுடமாகிய "வியத்தல்" என்பதன் பண்பும் பயனும் ஷை சூக்தம் நுதலிய வாற்றான் ஒருவாறு உணரத் தகும்.

சுபம்.

## திருவாசக உண்மை.

———

யாழ்ப்பாணம், தென்கோவை
தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமான். ச. கந்தையபிள்ளை
(வித்தகம் பேராசிரியர்)
அவர்களால் எழுதப்பட்டது.

கடவுள் தமது அருமைத் திருக் கரத்தால் எழுதி அகில சீவர்கள் உய்யும் பொருட்டு உதவி யருளியதும், மாணிக்கவாசகர் அருளிச் செய்ததும் தெய்வத் தமிழ் வேதமுமாகிய திருவாசகத்தின் உண்மைக் கருத்துக்களை நன்கு விளக்கி வசன நடையில் எழுதப்பட்டது.

வேண்டுவோர் 0-2-9 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்

நந்தி வெளியீட்டு மன்றம்.

புதுவை.

## இனம்! இனம்!!

### சுத்த சாதகம்.

———

துறவின் றன்மையையும், தேகம் சித்திபெற்றால் முத்தியுண்டாமென்பதன் றன்மையையும், சாதனசதுஷ்டயத்தின் றன்மையையும். மகாவாக்கியத்தின் பொருளையும், சொரூபானுபவத்தின் றன்மையையும், வேதாகமங்கள் கருத்துவகையால் வேறுபாடின்றி யிருக்கும் வகையையும், தத்துவஞானத்திற்குப் பரம்பரா சாதனமாயுள்ளவைகளின் றன்மையையும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் செப்பமாக விளக்கியுள்ள இந்நூலை துக்க நிவர்த்தியிலும் பரமாநந்தப் பிராப்தியிலு மிச்சையுள்ள ஒவ்வொருவரும் அத்தியாவசியமாய் அறிய வேண்டியதென்பது குன்றின் மேலிட்ட விளக்காம்.

வேண்டுவோர் தபால் முத்திரை செலவுக்கு உரிய 6 சதம் அல்லது 1 அணா ஸ்டாம்பு அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

நந்தி வெளியீட்டு மன்றம்.

புதுவை.

Imprimerie" VITTAGAM " — Pondichéry. Le Directeur-Gérant. R. Nagarattinam.